19

# விசாரணை

"**எ**ன்ன, வர வர ரொம்பக் கேள்வி கேட்கறே?'' பரபரவென்று சூட்கேஸில் அடுக்கிக் கொண்டிருந்த ராமநாதன் தலை நிமிராமல், குரலை உயர்த்தாமல் பேசினாலும் ஒரே வீச்சில் அவளை நிலைப் படிக்கப்பால் ஒதுக்குவதுபோல் அவளுக்குக் கூசிப் போயிற்று. மெல்லிய ரோசம் கூட ஏற்பட்டது.

''நீங்க எங்கே போறேள்னு எனக்குத் தெரிய வேண்டாமா? தினம் வர்ற டெலிபோனுக்குப் பதில் சொல்ல வேண்டாமா?''

ராமநாதன் சடக்கென்று நிமிர்ந்தார். அவரது கண்களில் தெரிந்த கோபத்தைக் கண்டு அவளுக்கு வழக்கம் போல் பயத்தில் அடிவயிறு துவண்டது. நாக்கு வறண்டுபோன நிலையில் கண்களில் ஏற்பட்ட மிரட்சியை மறைக்க அவள் சிரமப்பட்டாள்.

''வேண்டாம்!'' என்றார் அவர் ஆக்ரோஷத்துடன். ''நீ யாருக்கும் பதில் சொல்ல வேண்டியதில்லை. அவர் எங்கே போயிருக்கார்னு தெரியாதுன்னு சொல்லு.''

அவள் பேசாமல் அவரைப் பார்த்தபடி நின்றாள். அவர் மீண்டும் குனிந்து பெட்டியில் அடுக்குவதில் மும்முரமானார். குனிந்த தலையில் பெரிய சொட்டை தெரிந்தது. அதைச் சுற்றிச்

சந்திரப்பிறை வட்டம் போல் இருந்த முடி கிட்டத்தட்ட முழுசும் நரைத்திருந்தது. முன்பு கட்டுமஸ்தான உடம்பு இப்போது எடை கூடி இடை அகன்று தளர்ந்து போயிருந்தது. அந்த அவசரத்திலும் ஆஃப்டர் ஷேவ் லோஷனையும் சென்ட் பாட்டிலையும் க்ஷவரப்பையில் திணித்துக் கொள்வதை அவள் கவனித்தாள்.

''இப்ப என்ன புதுசாக் கேட்கறே?'' என்றார் அவர் தொடர்ந்து. ''எனக்கு எத்தனையோ வேலை இருக்கு, உனக்கும் அதுக்கும் சம்பந்தமில்லை. நா எந்த ஊருக்குப் போனாலும் உன்சௌகரியத்தைக் கவனிக்க ஆள் போட்டிருக்கேன். பணத் தட்டுப்பாடு இல்லை. என்னிக்காவது அந்தக் குறை இருக்கா உனக்கு?''

அவளுக்குப் பேசத் தோன்றவில்லை. அவரும் பதிலை எதிர்பார்க்கவில்லை, என்று தெரியும் அவளுக்கு.

''என்ன? எதுக்கு இன்னும் இங்கே நின்னுண்டிருக்கே? என்னைத் தொந்தரவு பண்ணாதே போ.''

''போறேன்'' என்றாள் அவள் நகராமல்.

''என்ன? என்ன?'' என்றார் அவர் பொறுமை இழந்து. ''என்ன இன்னைக்கு இந்த ஒன்பது கஜப் புடைவை எல்லாம்?''

அவளுக்கே அப்பொழுதுதான் நினைவு வந்தது போல அவள் சொன்னாள். ''காரடை நோன்பு இன்னைக்கு, நமஸ்காரம் பண்ணலாம்னு வந்தேன்.''

''ஓ?'' அவர் முகத்தில் சற்று இளக்கம் தெரிந்தது. ''சரி, அப்பப் பண்ணிட்டுப் போ. பூட்ஸ் போட்டிண்டிருக்கேன்-''

''பரவாயில்லை.''

அவள் மெல்ல குனிந்து அவருடைய கறுப்பு ஜோடு அணிந்த பாதங்களை வணங்கி விட்டுச் சிரமத்துடன் தரையில் கையை ஊன்றி எழுந்தாள்.

''கொஞ்சம் அடை சாப்பிடறேளா?''

''நோ!''

பெட்டியை மூடிப் பூட்டிச் சாவியைப் பான்ட் பாக்கெட்டுக்குள் திணித்து, ''நா பறந்துண்டிருக்கேன்னு தெரியல்லே?'' என்று சிடு சிடுத்து, ''உன் முட்டாள்தனத்துக்கு லிமிட்டே இல்லை'' என்று கூறியபடியே அவர் வெளியேறுகையில் அவளுள் மீண்டும் ஓர் அவமான உணர்வு ஏற்பட்டது. போர்ச்சில் நின்ற காரின் பின் கதவைத் திறந்து அவர் அமர்ந்ததும் கன வேகமாக டிரைவர் அமர்ந்து வண்டியைக் கிளப்பிய போது ராமநாதனின் சிந்தனையிலிருந்து அவள் முழுசாகக் கழன்று விட்டிருந்தது, அவர் அவள் பக்கமே திரும்பாததிலிருந்து தெரிந்தது.

என்ன புதுசா கேக்கறே?

ஏன் கேட்கக் கூடாதா? கேள்வி புதுசானாலும் நா பழசாச்சே? உங்களுக்கு அறுபத்தி அஞ்சுன்னா எனக்கு அறுபது... என்னிக்காவது கேட்க ஆரம்பிக்கணுமோ இல்லையோ.

வழவழ என்று இருந்த சலவைக்கல் தரையில் அவள் கவனத்துடன் நடந்து பூஜை அறைக்குச் சென்றாள்.

இங்கு ஒரு ஓரமாகப் போட்டிருந்த கோலத்தின் மீது சின்ன வாழை நுனி இலையில் இரண்டு வெல்ல அடையும் ஒரு உப்பு அடையும் இருந்தன. அதன்மேல் வைத்திருந்த கொட்டைப் பாக்களவு வெண்ணெய் உருகிப் பரவி இலையில் வழிந்திருந்தது. அவள்

மணையைப் போட்டு ஒரு முறை சுவாமி மேடையைப் பார்த்து வணங்கி அமர்ந்து அடை சாப்பிட ஆரம்பித்த போது காரணம் புரியாத சோர்வு ஆட்கொண்டது.

நினைவு தெரிந்த நாளாய் வருஷா வருஷம் இப்படி ஒரு கழக்கோடி அளவு தலையில் வெண்ணெய் அமர்ந்திருக்கும் கிண்ணென்ற அடையைச் சாப்பிட்டு வருவது நினைவுக்கு வந்தது. ஐந்து வயசில் கவுன் போட்ட கோலத்தில் சின்ன வாழை நுனி இலையில் அம்மா அடை வைக்க-உருகாத வெண்ணெயும் ஓரடையும் வார்த்து-ஒருக்காலும் புருஷன் பிரியாமலிருக்க பிரார்த்தித்து-

கவுனுக்கு வெண்ணெயிலும் அடையிலும் தான் ஆர்வம். தாவணி போடும்போது அடை அலுத்தது.

''எனக்குப் புருஷனே இல்லை. எதுக்குச் சாமிகிட்ட பொய் சொல்லணும்?''

''சும்மா எதிர் கேள்வி கேட்கக் கூடாது. இப்ப இல்லைன்னா என்ன? எப்பப் புருஷன் வந்தாலும் பிரியாம இருக்கணும் என்கிற பிராத்தனைன்னு வெச்சுக்கோ.''

''பிரியாம இருக்கணும்.''

அதுதான் முக்கியம் என்று அம்மா நினைத்தாள் என்று தோன்றிற்று. இன்று காலையில் கூட, ஐம்பத்தைந்து வருஷங்களாகச் சொல்லும் பிராத்தனையைச் சொன்னாள், மந்திரம் சொல்வது போல.

உருகாத வெண்ணெயும் ஓரடையும் நான் வார்த்தேன். ஒருக்காலும் என் புருஷன் பிரியாதிருக்க வேணும்-

கல்லுப்போலிருந்த வெண்ணெய் உருகிப் போச்சு. புருஷன் வெளியூருக்குப் போயாச்சு.

'கேட்கிறவாளுக்கு நான் எங்கே போயிருக்கேன்னே தெரியாதுன்னு சொல்லு.'

அவள் சாப்பிட்டு எழுந்து பூஜை அறையை ஒழுங்குபடுத்திப் பூட்டி விட்டுப் புடவையை மாற்றிக் கொள்ளாமல் டி.வி.க்கு எதிரில் அமர்ந்தாள். ஹிந்தியில் ஏதோ விவாதம் நடந்து கொண்டிருந்தது. ஸ்டார், ஸி.என்.என். என்று ஒன்று மாற்றி ஒன்று வைத்து எதுவும் பிடிக்காமல் அணைத்து ஒரு தமிழ்ச் சஞ்சிகையைப் பிரித்து வைத்துக் கொண்டாள். போன் ஒலித்தது.

''ஹலோ?''

ஹிந்தியில் யாரோ கேட்டார்கள்.

''ராமநாதன் இருக்காரா?''

''இல்லை.''

''எங்கே போயிருக்கிறார்?''

''தெரியாது.''

''எப்ப வருவார்?''

''தெரியாது.''

''நீங்க யார்?''

''அவருடைய மனைவி.'' அவள் ஒரு வினாடி நிறுத்தி, ''அவர் எங்கே போகிறார்னு எனக்குச் சாதாரணமாகச் சொல்லமாட்டார்.''

''அது ரொம்ப விநோதமானது, இல்லை மிஸஸ் ராமநாதன்?''

அவளுக்குச் சுருக்கென்றது, அந்தக் கேள்வியில் கிண்டல் தொனித்தது. தெரியாத மனிதனிடம் அநாவசிய வார்த்தை பேசிவிட்டோம் என்று தன்மேலே கோபம் வந்தது.

"நீங்கள் யார்?"

அதற்குப் பதில் சொல்லாமல் உடன் போனை வைத்தான். யாரோ போக்கிரியாக இருக்க வேண்டும் என்று அவளுக்கு நிச்சயமாகத் தோன்றிற்று. தில்லியில் இப்படிப்பட்ட மிரட்டல்கள் சகஜமாகி விட்டன. முக்கியமாக வசதியுள்ள வயதான தம்பதிகள் வாழும் பங்களாக்களில் கொள்ளையடிப்பதும் அதற்காகக் கொலை செய்வதும் வழக்கமாகிப் போய் விட்டது. இதற்காகவே ராமநாதன் நாயை வளர்க்கிறார். வாசலில் கூர்க்கா போட்டிருக்கிறார். அவனைத் தாண்டிக் கொண்டு யாரும் உள்ளே வந்துவிட முடியாது. கொள்ளை யடிப்பவன் கூர்க்காவைக் கைக்குள் போட்டுக் கொள்ள, அது முடியாவிட்டால் சுட்டுத்தள்ள எத்தனை நேரம் ஆகும்? முன்பின் தெரியாத யாருக்கும் அவன் கதவைத் திறப்பதில்லை. அதையும் மீறி ஏதேனும் நடந்தால் ஈசனே துணை. போனில் தொனித்த குரல் நிச்சயம் சிநேகிதன் மாதிரி இல்லை. பீதியளித்தது. ஈசுவரா, அவர் எங்கேயிருந்தாலும் நீதான் ரட்சிக்கணும். எங்கே இருக்கார்? தெரியாது. தெரியாது என்பது விநோதமானது. இல்லே? இல்லே.

கல்யாணமானதிலிருந்து இப்படிப்பட்ட விநோதமான அனுபவங்கள் எனக்கு நிறைய உண்டு. நானே விநோதமானவள். இப்படிப்பட்ட அனுபவங்களுக்குப் பிறகும் அடை வார்த்து அதன் தலையில் உருகாத வெண்ணெய் வைக்கிறேன். அதற்கெலாம் என்ன அர்த்தம் என்று எனக்குத் தெரியாது. செய்வது நல்லது, புருஷனுக்கு ரட்சை அது. எனக்கு ரட்சை? நாய், கூர்க்கா. அவளுக்கு இந்த நினைப்பு சிரிப்பைத் தரவில்லை.

உனக்குக் குறை வெச்சிருக்கேனா? குறைன்னா எந்த மாதிரி? பீரோவில் எப்பவும் பணம் உண்டு, அட்சய பாத்திரம் போல். 365 நாட்களுக்கு மேற்பட்ட புடைவைகள்; லாக்கிரில் ஐந்து செட் நகைகள்; கைகட்டிச் சேவகம் செய்ய ஆட்கள்.

உனக்கு என்னடி குறை?

குறையிருக்கே, இது தங்கக் கூண்டு. இது ஒரு மாயை. இந்தக் கூண்டைச் செஞ்ச மனுஷனைப் பத்தி எனக்குத் தெரியாது. அவனுடைய உலகம் வேறே. அதிலே எனக்கு இடமில்லை. அதிலே நுழையக் கூடிய சாமர்த்தியம் எனக்கு இல்லை. அனுமதி இல்லை. கூண்டு தங்கமா இருக்கிறதனாலேயே நான் கேள்வி கேட்டா எடுபடாது. கூக்குரல் போட்டா அமுங்கிப் போகும். உனக்கு இது போராதா, இன்னும் என்னதான் வேணும்னு அக்கம்பக்கத்துப் பெண்களே புருவத்தைத் தூக்குவா.

கேள்வி கேட்காம இருந்து வழக்கமாப் போச்சு. பயம் என்கிறதே உடம்போட ஒரு அங்கம் போல. நாதியத்த பொணத் துக்குத் தைரியம் எங்கேருந்து வரும்?

அதைத் தவிர கேள்வி கேட்டு அதுக்கு வரக்கூடிய பதிலைத் தாங்க எனக்குச் சக்தியில்லை. என்கிட்ட குறையுண்டு, படிப்பில்லே. ரூபமில்லை.'' உன்னை இத்தனை கௌரவமா வெச்சிண்டிருக்கிறதே பெரிசு.''

வாஸ்தவம்தான். அவருடைய முக லட்சணத்துக்கும் புத்திசாலித்தனத்துக்கும் நான் பொருத்தமில்லே. கல்யாணத்தின் போதே அது அவருக்குத் தெரியும், எனக்கும் தெரியும். நன்றிக் கடன்னாலே நடந்த கல்யாணம் அது. ஏழைப்பையன், புத்திசாலிப் பையன். என் பெண்ணைக் கல்யாணம் செய்துக்கோ உன் மேல் படிப்பைக் கவனிச்சுக்கறேன். வெளிநாட்டுக்கு அனுப்பறேன் என்று செய்த பேரம் அது. நன்றிக்கடன் பிரியத்தை ஏற்படுத்தாமல் சுமையாகிப் போகும் என்று அப்பாவுக்குத் தெரியவில்லை, எனக்கும் தெரியல்லே, அது ஏற்படுத்தின சுமைக்காகக் குற்றவாளியாகிப் போனது விசித்திரம். அந்தச் சுமை என்மேல் உட்கார்ந்திருக்கு முதுகுமேலே, அதான் நிமிர்ந்து ஒரு கேள்வி கேட்க முடியல்லே. நான்

குற்றவாளி. ஒரு குழந்தையைக் கூடப் பெத்துத் தர வக்கில்லாத குற்றவாளி.

மீண்டும் டெலிபோன் ஒலித்தது. அவள் சோர்வுடன் எழுந்தாள். ''ஹலோ''

''ராமநாதன் இருக்காரா?''

''இல்லே.''

''எங்கே போயிருக்கிறார்?''

''தெரியாது.''

''ஊரிலே இருக்காரா?''

''இல்லே.''

''எந்த ஊருக்குப் போயிருக்கார்?''

''தெரியாது.''

''எப்ப வருவார்?''

''தெரியாது.''

''யார் பேசுகிறது?''

''அவர் மனைவி.''

''சரியான பதிவிரதைதான் நீங்கள்.''

அவள் சடக்கென்று டெலிபோனை வைத்தாள்.

எவனோ போக்கிரிதான். எதற்காக இப்படி அடிக்கடி போன் செய்கிறான்? ஆனால் இது வேறு குரல். இன்னொரு போக்கிரி. ஓ, அசட்டுத்தனம் செஞ்சேன் என்று அவள் சொல்லிக்கொண்டாள். இவர்

ஊரில் இல்லை என்றே சொல்லியிருக்கக் கூடாது. அவர் இல்லைன்னு தெரிஞ்சு கொள்ளையடிக்க வந்தான்னா? அவளுக்கு லேசாக உடம்பு நடுங்கிற்று.

எல்லாக் கதவுகளும் தாழ்ப்பாள் போடப்பட்டிருக்கிறதா என்று சரிபார்ப்பதற்குள் கால்கள் பின்னிக் கொண்டன. வேலைக்காரன் பகதூரை உள்ளே படுக்கச் சொல்லலாமா, வாசல் கூர்க்காவை எச்சரிக்கலாமா என்று யோசித்து... அவர்களே கொள்ளைக்காரனுக்கு உடந்தையாகிப் போனால் என்கிற சம்சயத்துடன் அவள் பேசாமல் படுக்கையறைக்குச் சென்று கதவை இழுத்துத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டாள். நோன்பிற்காகக் கட்டியிருந்த ஒன்பது கெஜம் புடை வையை அவிழ்த்து ஆறு கெஜம் கட்டிக்கொண்டு, கழுத்தில் அணிந் திருந்த அட்டிகையைக் கழற்றி நகைப் பெட்டியில் வைக்கும்போது ஒரு துண்டு சீட்டு தென்பட்டது. அதில் ஒரு டெலிபோன் எண் எழுதப்பட்டிருந்தது. தில்லி எண். அவள் குழப்பத்துடன் அதைத் திருப்பினாள்.

''அவசரக் காலத்துக்கு மட்டும், யாருக்கும் தெரிய வேண்டாம். சீட்டை மறைத்து வை'' என்று தமிழில் எழுதப்பட்டிருந்தது.

சட்டென்று மனசு நெகிழ்ந்தது. போகிற அவசரத்திலும் அவர் மறக்காமல் இந்தச் சீட்டை வைத்து விட்டுப் போயிருந்தது, நெஞ்சுக் குள் பிரவாகமாய்க் கனிவைச் சுரந்தது! அவருக்கு என்ன பிரச் சனையோ, உத்யோகத்தில் என்ன சிக்கலோ? ஈசுவரா நீதான் அவரை ரட்சிக்கணும். நீதான் அவருடைய சிக்கல்களைப் போக்கணும்!

அவள் மீண்டும் அந்தச் சீட்டைப் பார்த்தாள். அவளுக்குப் பழக்கமான எண் இல்லை. அவருடைய உலகம் பெரிசு, எத்தனையோ சிநேகிதர்கள். இது யாருடையதோ?

அந்த பெரிய உலகத்தில் விரோதிகளும் இருப்பார்கள். மற்றவர்கள் பொறாமைப்படும் அளவுக்கு இவருக்குப் பணம் காசும் புகழும் உண்டு. விரோதத்துக்கு அடிப்படைக் காரணம் பொறாமை.

எவன் என்ன செய்ய நினைக்கிறானோ இவர் தலை மறைவா இருக்க முடிவு செய்யணும்னா இது மாமூலான விஷயமில்லை. ஆண்டவனே நீதான் அவருக்குத் துணை.

அவள் அந்தச் சீட்டைப் பத்திரமாக மடித்தாள். எங்கே அதை மறைக்கலாம் என்று யோசனை செய்யும் போது வாசல் அழைப்பு மணி விடாமல் ஒலித்தது. அவள் சட்டென்று அதை ப்ளவுசுக்குள் செருகிக் கொண்டாள்.

மாடி பால்கனி வழியாகப் பார்த்த போது ஒரு போலீஸ் ஜீப் தெரிந்தது. போலீஸ் வந்திருக்கா என்று பதைப்பு ஏற்பட்டது. அவள் முதலில் கதவைத் திறக்கவில்லை. பிறகு திறக்காமல் இருக்க முடியவில்லை. வந்திருந்தது போலீஸ் இல்லை. புலனாய்வுத் துறையில் பணிபுரியும் கோபாலன். ராமநாதனின் நண்பர். இன்று கோபாலனின் முகத்தில் பிரசன்னம் இல்லை. அலுவலக உடுப்பில் இருந்தார்.

''கோபாலனா, வாங்கோ!'' என்று நிம்மதியுடன் அவள் கதவைத் திறந்தாள்.

''நானே உங்களுக்கு டெலிபோன் பண்ணலாம்னு நினைச்சேன். பயமுறுத்தல் மாதிரி டெலிபோன் கால் வந்துண்டேயிருக்கு.''

''என்ன மாதிரி?''

''ராமநாதன் இருக்காரான்னு... சாதாரண கேள்வியா இல்லை. பயமுறுத்தல் மாதிரி.''

''ராமு எங்கே?''

''எங்கே போயிருக்கார், எப்போ வருவார்ன்னு நிஜம்மாவே எனக்குத் தெரியாது.''

''அவரைக் கான்டாக்ட் பண்ணணும்னா என்ன செய்வேள்?''

கோபாலன் இயல்பாகக் கேட்பதுபோல் கேட்டார். ப்ளவுசுக்குள் இருந்த விஷயத்தைச் சொல்லிவிடலாம் என்று நினைத்த வேகத்துடன் நிறுத்திக் கொண்டாள்.

''எங்கிட்டே எதுவும் சொல்லிட்டுப் போகல்லே. இரண்டு நாள்லே வந்துடுவாராயிருக்கும்.''

கோபாலன் எதுவும் சொல்லாமல் யோசனையுடன் எழுந்து உரிமையுடன் மேஜையடி, டெலிபோன் டைரக்டரி எல்லாம் துழாவினார். அறைக்குள் இன்னும் மூன்று ஆட்கள் வந்து நின்றார்கள்.

''என்ன விஷயம் கோபாலன்?'' என்றாள் அவள் சந்தேகத்துடன்.

கோபால் லேசாகப் பெருமூச்சு விட்டமாதிரி இருந்தது. மெல்லிய குரலில் சொன்னார்: ''நீங்க என்னை மன்னிக்கணும். நான் ஆபீஸ் ட்யூடியிலே வந்திருக்கேன். வீட்டைச் சோதனை போடணும்.''

அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

''ஏன்?''

''ராமு மேல புகார் வந்திருக்கு லஞ்சப் புகார்.''

அடி வயிறு துவண்டது.

''அவரைக் கண்டு ரொம்ப பேருக்குப் பொறமை, புகார் செய்வா வேணுமின்னே'' என்றாள் அவள் ரோசத்துடன்.

அவர் அவளை நேரிடப் பார்க்காமல் சொன்னார். ''புகாருக்கு ஆதாரமில்லேன்னா சோதனைப் போட வர மாட்டோம்.''

அவள் திடுக்கிட்டாள். அவளுக்குத் தெரிந்த கோபாலன் இல்லை இது. நண்பராக வேஷம் போட்ட இவரும் எதிரியா?

''அவர் இல்லாதபோது சோதனை போடறது சரியா?'' என்றாள் பலவீனமாக.

''நாங்க எங்க ட்யூட்டியைச் செய்யணும். அவர் இருந்தாலும் இல்லாட்டாலும்...''

''அந்தப் புகாரை நான் நம்பல்லே.'' என்றாள் அவள் உத்வேகத்துடன் அதற்கான ஆதாரம் என்ன என்று விளங்காமல்.

''அதை நம்ப எனக்கும் ஆசையில்லே'' என்றார் அவர் சோகமாக. ''ஆனா என் கடமையை நான் செய்யணும்.''

''சரி செய்யுங்கோ'' என்றாள் அவள் தன் கோபத்தை மறைத்துக்கொண்டு.

அடுத்த ஒரு மணி நேரத்தில் அவர்கள் எல்லா அறையிலும் புகுந்து எல்லாவற்றையும் தலைகீழாகக் கவிழ்த்தார்கள். சில காகிதங்களை எடுத்து வைத்துக் கொண்டார்கள். ஐயோ ஐயோ என்று அவளுக்குப் பதைத்தது. அட்டிகைப் பெட்டியைக் கூடத் திறந்தார்கள்.

இரண்டு மணி நேரத்துக்குப் பின் கோபாலன் ஓர் அந்நியனைப் போல அவளிடம் சொன்னான்:

''உங்களுடைய உதவி எங்களுக்கு வேணும். ராமுவைப் பத்தித் தகவல் வந்தவுடனே எங்களுக்குத் தெரிவிக்கணும்.''

''அவர் ஏதாவது ஆபத்திலே சிக்கிண்டிருக்கிறாரா?''

''ஆபத்தான விளையாட்டு விளையாடினா ஆபத்திலே சிக்காம இருக்க முடியுமா?''

''கோபாலன், நீங்க கூட என்ன இப்படிப் பேசறேள்?'' ''சினேகிதர் இல்லையா நீங்க?''

''சினேகிதத்தாலே தான் வருத்தப்படறேன்.''

''புகார் நிஜம்னு நினைக்கிறேளா?''

''நா இப்ப எதுவும் சொல்ல முடியாது. நீங்க ராமு இருக்கிற இடத்தைப் பற்றித் தகவல் தெரிஞ்ச உடனே எங்களுக்குத் தெரிவிக்கிறது நல்லது.''

கோபாலன் அதற்கு மேல் நிற்காமல் கிளம்பிப் போன பிறகு அவள் வெகுநேரம் பிரமை பிடித்தவள் போல அவர்கள் செய்து விட்டுப் போயிருந்த அலங்கோலத்திடையே உட்கார்ந்திருந் தாள். கோபாலனிடம் ஏற்பட்டிருந்த மாற்றம் நம்ப முடியாததாக இருந்தது. எத்தனை வருஷத்து நெருக்கமான பழக்கம்! 'என்ன மன்னி இன்னிக்கு டிபன்?' என்று சமையலறைவரை வருபவர்.

'சினேகிதத்தாலே தான் வருத்தப்படறேன்.'

லஞ்சப் புகார் உண்மையாக இருக்குமா? அதைப்பத்தி தெரிஞ்சுபோனதாலேதான் அத்தனை அவசரமா ஓடினாரா? ஓடும் அவசரத்திலும் அவர் எடுத்து வைத்துக்கொண்ட வாசனைத் திரவி யங்கள் ஞாபகத்துக்கு வந்தன. அவள் ப்ளவுசுக்குள் இருந்த சீட்டை எடுத்துப் பிரித்தாள். வியர்வையில் லேசாகப் பிசுபிசுத்திருந்தது. எவளுடைய வீடு? லஞ்சம் எதற்கு? ஆயிரம் ஆயிரமா சம்பாதிக் கிறது போறல்லியா? இத்தனை சினேகிதிகளைச் சமாளிக்கனும்னா எப்படிப் போறும்?

அவள் திடுக்கிட்டாள். அந்தக் குற்றச்சாட்டுகள் உண்மை என்று அவள் எப்படி முடிவு கட்டுவது? நோன்பு செய்த நாளும் அதுவுமா இதென்ன இது இப்படிப்பட்ட விரோதமான நினைப்பு என்று கூச்சமேற்பட்டது. சுற்றிலும் இருந்த களேபரத்தைச் சரி செய்யத் தெம்பில்லாமல் அவள் விளக்கை அணைத்துப் படுக்கையில் படுத்தாள்.

''கல்யாணமாகி இந்த 45 ஆண்டுகளில் ஏற்பட்டுப் பழகிப் போன அதிர்ச்சிகளில் இன்றைய அதிர்ச்சி தனிப்பட்டு நின்றது. இதுவரை நினைத்துப் பாராதது. அவருக்கு மிகப் பெரிய உத்தி யோகம். நிறைய சம்பளம், அது எவ்வளவு என்று அவளுக்கு நிச்சய மாகத் தெரியாமல் போனாலும், வீட்டில் இருக்கும் விலைபெற்ற சாமானெல்லாம் அந்தச் சம்பாத்தியத்தில் வருவது தானா என்ற சந்தேகம் தோன்றாத நம்பிக்கையுடன் வளைய வந்து கொண்டிருக்கிறாள்.

இரவு முழுவதும் தூங்காமல் கழிந்தது. பழக்கம் காரணமாகக் காலையில் சீக்கிரம் எழுந்து குளித்து சாமி விளக்கை ஏற்றிச் சமையலறைக்குள் நுழைந்த போது, ''பேப்பர்லே சாபுடைய போட்டோ வந்திருக்கு'' என்று பகதூர் பேப்பரை நீட்டினான். அடி வயிறு ஜில்லிட்டது. கண்ணாடியைத் தேடி அணியும்போது விரல்கள் லேசாக ஆட்டம் கண்டன. பத்தி பத்தியாக இருந்தது செய்தி. அரசுக்குத் துரோகமாகப் பெரிய அளவில் லஞ்சம் வாங்கிய குற்றத் திற்கு நிரூபணமான கடிதங்கள், கையொப்பங்கள் அச்சேறியிருந்தன.

''உடனே அந்த நம்பருக்குப் போன் செய்து இப்படிப்பட்ட துரோகியா நீங்க?'' என்று போனில் அவரை உலுக்க வேண்டும் போல் இருந்தது. ''இதுக்குத்தான் எங்கப்பா உங்களைப் படிக்க வெச்சாரா?''

விஷயம் அறிந்து கொண்ட வேலைக்காரர்கள் அவளிடம் என்ன ஏது என்று விசாரிக்கக் கூட வரவில்லை. அவள் வெகு நேரம் பிரமை பிடித்து அமர்ந்திருந்தாள். பிறகு ஒரு தீர்மானத்துக்கு வந்தவளாகக் கோபாலனின் நம்பரைச் சுழற்றினாள்.

''நா தான் ருக்மிணி பேசறேன். ஒரு டெலிபோன் நம்பர் தரேன். அங்கே இருப்பார் அவர்.''

கோபாலன் பலமுறை நன்றி சொல்லி அதைக் குறித்துக் கொண்டார்.

''பேப்பர் படிச்சேளா மன்னி?'' என்றார் தயக்கத்துடன்.

''படிச்சேன்'' என்றாள் அவள் சோர்வுடன்.

அவர் சில விநாடிகள் பதில் சொல்லாமல் ''உங்களை எப்படிப் பாராட்டறதுன்னு...'' என்று தொடர்ந்தபோது அவள் போனை வைத்தாள்.

அவளுள் ஏதோ செத்துப் போனது போல இருந்தது. ராமநாதன் அவள் செய்கையை அறிந்தால் அதிர்ந்து போவார். 'நீயா சொன்னே?' என்று பல்லைக் கடிப்பார். 'பழி தீர்த்துக்கறியா?' என்பார்.

இல்லை. பழி தீர்த்துக்கற வர்க்கம் இல்லை இது. இனிமே பழி தீர்த்துண்டு என்ன ஆகணும்? எனக்கு நடந்த துரோகத்தை அபத்தமா பொறுத்துண்டேன், குற்ற உணர்வுனாலே. என்னை மட்டும் பாதிச்ச துரோகம் அது. ஆனா தேசத் துரோகத்தைப் பொறுத்துக்க முடியாது. பிறக்கப் போற சந்ததியையெல்லாம் பொசிக்கிப்புடும் அது.

'சாவித்திரி நோன்பு செஞ்சயே? புருஷன் பிரியாம இருக்கணும்னு வேண்டிண்டியே, வேஷமா?'

'இல்லை, அறிவீனம். அது ஒரு மந்திரம்னு நினைச்சேன், இனிமே கேள்வி கேட்காதீங்கோ. பதில் சொல்ல வேண்டிய கட்டாயத்திலே நா இப்ப இல்லை.

**கலைமகள் தீபாவளிமலர் 1992**

